# ॥ तत्वोपदेशः ॥

## தத்வோபதேச:

(1)

तत्त्वं पदार्थशुद्ध्यर्थं गुरुःशिष्यं वचोऽब्रवीत् ।
वाक्ये तत्त्वमसीत्यत्र त्वं पदार्थं विवेचय ॥

தத்வம் பதார்த்த சுத்யர்த்தம் குரு: சிஷ்யம் வசோऽப்ரவீத்।
வாக்யே தத்வமஸீத்யத்ர த்வம் பதார்த்தம் விவேசய॥

'தத்வமஸி' - என்ற மஹாவாக்யத்தில் 'தத்த்வம்' என்ற தொடரின் பொருள் தெளிவாகத் தெரிந்து கொள்ள வசதியாக த்வம்' சொல்லின் பொருளை ஆராய்ந்து அறிவாயாக என்று குரு சீடனிடம் கூறினார்.

(2)

न त्वं देहोऽसि दृश्यत्वाद्रूपजात्यादिमत्त्वतः ।
भौतिकत्वादशुद्धत्वादनित्यत्वात्तथैव च ॥

ந த்வம்தேஹோஸி த்ருச்யத்வாத் ரூபஜாத்யாதிமத்வத:।
பௌதிகத்வாத் அசுத்தத்வாத் அநித்யத்வாத் ததைவச॥

த்வம்' என்பது தேஹம் அல்ல, உருவம், இனம் முதலியவையோடு சேர்ந்து காட்சிக்குரியதாய் இருப்பதாலும், பஞ்சபூத விகாரமானதாலும், தூயதாய் இல்லாததாலும், அநித்யமாய் இருப்பதாலும் (என்று அறிய வேண்டும்).

(3)

अदृश्यो रूपहीनस्त्वं जातिहीनोऽप्यभौतिकः ।
शुद्धनित्योऽसि दृग्रूपो घटो यद्वन्न दृग्भवेत् ॥

அத்ருச்யோ ரூபஹீநஸ்த்வம் ஜாதி ஹீநோऽப்ய

பௌதிக:

சுத்த நித்யோऽஸி த்ருக்ரூபோ கடோ யத்வத்

நத்ருக்பவேத்।

த்வம்' - என்பது உருவ மற்று காட்சிக்குரியதல்ல. ஜாதியும் இல்லை அதற்கு. பூத விகார மற்றதும், சுத்தமாயும் நித்யமாயும் உள்ளது. குடம் காண்பது போல் காண்பதன்று த்வம்' என்பது.

(4)

न भवानिन्द्रियाण्येषां करणत्वेन यत् श्रुतिः ।
प्रेरकस्त्वं पृथक् तेभ्यः न कर्ता करणं भवेत् ॥

ந பவாநித்ரியாண்யேஷாம் கரணத்வேநயத் ச்ருதி:।
ப்ரேரகஸ்த்வம் ப்ருதக்தேப்ய: நகர்தா கரணம் பவேத்॥

த்வம்' - என்பது புறக்கணங்களில்லை. ச்ருதி வாக்யப்படி புறக்கரணங்கள் கரணங்களே, த்வம்' என்பது இந்த்ரியங்களின்றும் வேறான ஊக்கியே அது கர்தாவாக இல்லை.

(5)

नानैतान्येकरूपस्त्वं भिन्नस्तेभ्यः कुतः श्रुणु ।
न चैकेन्द्रियरूपस्त्वं सर्वत्राहं प्रतीतितः ॥

நாநைதாந்யேக ரூபஸ்த்வம் பிந்நஸ்தேப்ய: குத: ச்ருணு।
நசைகேந்த்ரிய ரூபஸ்த்வம் ஸர்வத்ராஹம் ப்ரதீதித:॥

இந்த்ரியங்கள் பலவையாய் இருக்க, அவற்றினின்று வேறுபட்டு ஒரே ரூபம் கொண்டது த்வம்' என்பது. ஆனால் ஒரே இந்த்ரியம் என்ற வடிவிலும் த்வம்' இல்லை, ஏனெனில் எல்லாவற்றிலும் 'அஹம்' (நான்) என்ற உணர்வு வருவதால்.

(6)

न तेषां समुदायोऽसि तेषामन्यतमस्य च ।
विनाशेऽप्यात्मधीस्तावदस्ति स्यान्नैवमन्यथा ॥

நதேஷாம் ஸமுதாயோऽஸி தேஷாமந்யதமஸ்ய ச।
விநாசேऽப்யாத்ம தீஸ்தாவ தஸ்தி ஸ்யாந்நை
வமந்யதா॥

இந்த்ரியங்களின் கூட்டாகவும் த்வம் பதார்த்தம் பொருந்தாது, ஏனெனில் அவற்றில் ஒன்று நீங்கினால் கூட 'ஆத்ம' உணர்வு வருகிறதே!

(7)

प्रत्येकमपि तान्यात्मा नैव तत्र नयं श्रुणु ।
नानास्वामिकदेहोऽयं नश्येद्भिन्नमताश्रयः ॥

ப்ரத்யேக மபி தாந்யாத்மா நைவ தத்ர நயம் ச்ருணு।
நாநா ஸ்வாமிகதேஹோऽயம் நச்யேத் பிந்நமதாச்ரய:॥

இந்த்ரியங்கள் ஒவ்வொன்றும் கூட ஆத்மாவாக ஆக முடியாது. ஏனெனில், அப்படியாகில் பல தலைவர்களைக் கொண்டதாய் விடும் இந்ததேஹம், அது மட்டுமல்ல பலர் பேச்சைக் கேட்கும் தலைவன் போல அழிந்தும் போகும்.

(8)

नानात्माभिमतं नैव विरुद्धविषयत्वतः ।
स्वाम्यैक्ये तु व्यवस्था स्यादेकपार्थिवदेशवत् ॥

நாநாத்மாபிமதம் நைவ விருத்த விஷயத்வத:।
ஸ்வாம்யைக்யே து வ்யவஸ்தா ஸ்யாத் ஏக பார்திவ
தேசவத்॥

வெவ்வேறு விஷயங்கள் கொண்டிருப்பதால் பல ஆத்மாக்கள் என்றதும் விரும்பத்தக்கதல்ல. ஒரே தலைவன் என்றிருந்தால் தானே ஒரே அரசன் கொண்ட நாடுபோல் கட்டுப்பாடு உள்ளதாக இருக்கும்.

(9)

न मनस्त्वं न वा प्राणो जडत्वादेव चैतयोः ।
गतमन्यत्र मे चित्तमित्यन्यत्वानुभूतितः ॥

நமநஸ்த்வம் நவா ப்ராணோ ஜடத்வாதேவசைதயோ:।
கதமந்யத்ர மே சித்தம் இத்ய ந்யத்வானு பூதித:॥

ஜடமாக இருப்பதால் மனதோ, ப்ராணனோ, கூட ஆத்மா ஆக முடியாது. 'எனது' மனம் எங்கோ இருந்தது என வேறுபட்ட அனுபவம் வருவதால் மனது எப்படி ஆத்மா வாகும்?

(10)

क्षुत्तृड्भ्यां पीडितः प्राणो ममायं चेति भेदतः ।
तयोर्द्रष्टा पृथक् ताभ्यां घटद्रष्टा घटाद्यथा ॥

க்ஷுத்த்ருட்ப்யாம் பீடித: ப்ராணோ மமாயம் சேதிபேதத:।
தயோர்த்ரஷ்டா ப்ருதக் தாப்யாம் கடத்ரஷ்டாகடாத்யதா॥

பசிதாகத்தால் இந்த என் பிராணன் துவள்கிறது என்று சொல்லுமிடத்தில், பசிதாகத்தை வேறாகக் காண்கிற பிராணன் குடத்தை காண்பவன் குடத்தின்று வேறானவன்போல வேறானது தானே!

(11)

सुप्तौ लीनाऽस्ति या बोधे सर्वं व्याप्नोति देहकम् ।
चिच्छायया च सम्बद्धा न सा बुद्धिर्भवान् द्विज ॥

ஸுப்தௌ லீநாஸ்தி யா போதே ஸர்வம் வ்யாப்
நோதிதேஹகம்।
சித்சாயயாச ஸம்பத்தா நஸா புத்திர்பவான் த்விஜ॥

ஸுஷுப்தியில் எங்கேயோ இருந்த புத்தி வேறு நிலையில் தேகம் முழுதும் வியாபித்து நிற்கிறது. அதில் அறிவின் நிழலாட்டமும் அப்பொழுது கூடி நிற்கிறது. அப்படியான புத்தியும் நீ அல்ல.

(12)

नानारूपवती बोधे सुप्तौ लीनाऽतिचञ्चला ।
यतो दृगेकरूपस्त्वं पृथक् तस्य प्रकाशकः ॥

நாநாரூபவதீ போதே ஸுப்தௌ லீநா ऽதிசஞ்சலா।
யதோ த்ருகேக ரூபஸ் த்வம் ப்ருதக் தஸ்ய ப்ரகாசக:॥

ஜாக்தரத் அவஸ்தையில் பற்பல உருவமாயிருப்பினும் ஸுஷுப்தியில் எங்கோ ஒளிந்திருக்கும் அந்த புத்தி சஞ்சலமானது. அதை அறிகின்ற நீ அதனின்று வேறுபட்டவன்.

(13)

सुप्तौ देहाद्यभावेऽपि साक्षी तेषां भवान् यतः ।
स्वानुभूतिस्वरूपत्वान्नान्यत्तस्यास्ति भासकः ॥

ஸுப்தௌ தேஹாத்யபாவேऽபிஸாக்ஷீ தேஷாம் பவான்யத:।
ஸவாநு பூதி ஸ்வரூபத்வாத் நான்யஸ்தஸ்யாஸ்தி பாஸக:॥

தேகம் முதலியன இல்லாதிருந்தும், ஸுஷுப்தியில் தேகாதிகளுக்கு சாக்ஷியாய் இருப்பவன் நீ. அவரவர் அனுபவம் வாயிலாகவே அறிய வேண்டியவனாய் இருப்பதால் வேறு எவரும் வெளிப்படுத்துவோரில்லை.

(14)

प्रमाणं बोधयन्तं तं बोधं मानेन ये जनाः ।
बुभुत्सन्ते त एधोभिर्दग्धुं वाच्छन्ति पावकम् ॥

ப்ரமாணம் போதயந்தம்தம் போதம் மாநேந யே ஜநா:।
புபுத்ஸந்தே த ஏதோபி: தக்தும் வாஞ்சந்தி பாவகம்॥

ப்ரமாணத்தைத் தெளிவிக்கும் அறிவேயான அந்த ஆத்மாவை ப்ரமாணத்தினால் அறிய விரும்பும் ஜனங்கள், பாவம் எரிக்கும் தீயை விறகு முதலிய எரிபொருளால் எரிக்க விரும்புகிறார்கள்.

**(15)**

विश्वमात्मानुभवति तेनासौ नानुभूयते ।
विश्वं प्रकाशयत्यात्मा तेनासौ न प्रकाश्यते ॥

விச்வமாத்மா஽னுபவதி தேநாஸௌ நானு பூயதே।
விச்வம் ப்ரகாசயத்யாத்மா தேநாஸௌ நப்ரகாச்யதே॥

ஆத்மாதான் உலகை ஆண்டு அனுபவிக்கிறது, உலகத்தால் ஆத்மா அனுபவிக்கப்பட வில்லை, ஆத்மா உலகை பிரகாசிக்கச்செய்கிறதேயொழிய உலகத்தால் ஆத்மாபிரகாசமடையவில்லை.

**(16)**

ईदृशं तादृशं नैतन्न परोक्षं सदेव यत् ।
तद् ब्रह्म त्वं न देहादिदृश्यरूपोऽसि सर्वदृक् ॥

ஈத்ருசம் தாத்ருசம் நைதத் நபரோக்ஷம் ஸதேவ யத்।
தத்ப்ரஹ்ம த்வம் நதேஹாதி த்ருச்யரூபோ஽ஸி
ஸர்வத்ருக்॥

‘இவ்வாறானது’ ‘அவ்வாறானது’ என்று காட்ட முடியாத, கண்ணுக்கு அப்பாற்படாத, ஸத்தான ப்ரஹ்மமாகவே ஆத்மா உள்ளது. தேஹம் முதலிய காணும் பொருளல்ல ஆத்மா; பின் எல்லாவற்றையும் காணும்படி செய்யும் ஆற்றலே ஆத்மா.

**(17)**

इदन्तेनैव यद्भाति सर्वं तच्च निषिद्ध्यते ।
अवाच्यतत्त्वमनिदं न वेद्यं स्वप्रकाशतः ॥

இதந் தேனைவ யத்பாதி ஸர்வம் தத்ச நிஷித்யதே।
அவாச்ய ததவமநிதம் நவேத்யம் ஸ்வப்ரகாசத:॥

'அதன்று', 'இதுதான்' என்று எல்லாமாக விளங்கும் ப்ரஹ்மம், விவரிக்க முடியாத உண்மைப் பொருளாகும். தானே விளங்கியாய் இருப்பதால், இது வல்லாத ஒன்று அறியப்பட வேண்டியதில்லை.

**(18)**

सत्यं ज्ञानमनन्तं च ब्रह्मलक्षणमुच्यते ।
सत्यत्वात् ज्ञानरूपत्वादनन्तत्वात् त्वमेव हि ॥

ஸத்யம் ஜ்ஞானமநந்தம் ச ப்ரஹ்மலக்ஷணமுச்யதே।
ஸத்யத்வாத் ஜ்ஞானரூபத்வாத் அனந்தத்வாத்
த்வமேவஹி॥

ப்ரஹ்மத்தின் இலக்கணம் ஸத்யம், ஜ்ஞானம், அநந்தம் என்பது. அதுவே தான் ஆத்மலலக்ஷணமும் (ஆகவே ப்ரஹ்மமே ஆத்மா)

**(19)**

इति देहाद्युपाधौ स्याज्जीवस्तस्य नियामकः ।
ईश्वरः शक्त्युपाधित्वात् द्वयोर्बोधे स्वयंप्रभः ॥

ஸதி தேஹாத்யுபாதௌ ஸ்யாத் ஜீவஸ்தஸ்ய நியாமக:।
ஈச்வர: சக்த்யுபாதித்வாத் த்வயோர் போதே
ஸ்வயம்ப்ரப:॥

தேகம் முதலிய உபாதி இருப்பதால் ஜீவன் அதன் யஜமானன். சக்தி என்ற உபாதியுடன் ஈச்வரனே தன்னைத்தானே பிரகாசிக்கச் செய்து ஜீவாத்மாவையும் பிரகாசிக்கச் செய்கிறார்.

(20)

अपेक्ष्यतेऽखिलैर्मानैः न यन्मानमपेक्षते ।
वेदवाक्यं प्रमाणं तद् ब्रह्मात्मावगतौ मतम् ॥

அபேக்ஷ்யதே ऽகிலைர்மானை: ந யன்மானம் அபேக்ஷதே।
வேத வாக்யம் ப்ரமாணம் தத்ப்ரஹ்மாவகதௌமதம்॥

ப்ராமணம் எதையும் நாடாதது ஏதுவோ, எதன் பிரமாணம் மற்றெல்லா பிரமாணங்களுக்கும் தேவையோ அந்த ப்ரம்ம - ஆத்மதத்வத்தை அறிய வேத வாக்யமொன்றே போதுமானது.

(21)

अतोहि तत्त्वमस्यादि वेदवाक्यप्रमाणतः ।
ब्रह्मणोऽस्ति यया युक्त्या साऽस्माभिः संप्रकीर्त्यते ॥

அதோஹி தத்வமஸ்யாதி வேதவாக்யம் ப்ரமாணத:।
ப்ரஹ்மணோऽஸ்தி யயாயுக்த்யா ஸாऽஸ்மாபி:
ஸம்ப்ரகீர்த்யதே॥

அதனால், 'தத்வமஸி' - இதுமுதலான வேத வாக்யம், பிரம்மம் இருக்கிறதென்பதை எந்த யுக்தி வாயிலாக மெய்ப்பிக்கிறது என்பதை இப்பொழுது கூற இருக்கிறோம்.

(22)

शोधिते त्वं पदार्थे हि तत्त्वमस्यादिचिन्तितम् ।
सम्भवेन्नान्यथा तस्माच्छोधनं कृतमादितः ॥

சோதிதே த்வம்பதார்த்தே ஹி தத்வமஸ்யாதி சிந்திதம்।
ஸம்பவேந் நான்யதா தஸ்மாத் சோதனம் க்ருதமாதித:॥

'தத்வமஸி' என்றவிடத்தில் த்வம்' என்பதன் பொருள் விளக்கப்பட்டாலன்றி அந்த முழுவாக்யத்தின் பொருள் கூறப் பட்டதாகாது. எனவே முதலில் த்வம்' பதார்த்தம் விளக்கப் பட்டது.

(23)

देहेन्द्रियादिधर्मान् यः स्वात्मन्यारोपयन्मृषा ।
कर्तृत्वाद्यभिमानी च वाच्यार्थस्त्वं पदस्य सः ॥

தேஹேந்த்ரியாதிதர்மான்ய: ஸ்வாத்மந்யாரோபயன் ம்ருஷா।
கர்த்ருத்வாத்யபிமாநீ ச வாச்யார்த்தஸ்த்வம் பதஸ்ய ஸ:॥

தேகம், புறக்கரணங்கள் இவற்றின் செயற்பாடுகளை நிஜ ஆத்மாவில் இருப்பதாகக் கொண்டு 'கர்த்ருத்வம்' - செய்பவன் என்ற எண்ணத்தைக் கொள்பவன் நீ என்ற த்வம் பதத்தின் நேர்பொருள்.

(24)

देहेन्द्रियादिसाक्षी यस्तेभ्यो भाति विलक्षणः ।
स्वयं बोधस्वरूपत्वाल्लक्ष्यार्थस्त्वं पदस्य सः ॥

தேஹேந்த்ரியாதி ஸாக்ஷீயஸ் தேப்யோ பாதி விலக்ஷண:।
ஸ்வயம் போதஸ்வரூபத்வாத் லக்ஷ்யார்த்த ஸ்த்வம் பதஸ்யஸ:॥

த்வம்' என்பதின் லக்ஷணையால் கிடைக்கும்பொருள் யாதெனில் தேஹம், இந்திரியங்கள் இவற்றிற்கு ஸாக்ஷியாக இருந்து, ஆனால் அவற்றினின்று வேறுபட்டதாய் விளங்குவதும், தானே அறியும் ஆற்றல் கொண்டதும் தான் த்வம்' - என்பதன் லக்ஷ்யார்த்தம்.

(25)

वेदान्तवाक्यसंवेद्यविश्वातीताक्षरद्वयम् ।
विशुद्धं यत्स्वसंवेद्यं लक्ष्यार्थस्तत्पदस्य सः ॥

வேதாந்த வாக்யஸம்வேத்ய விச்வாதீதாக்ஷரத்வயம்।
விசுத்தம் யத்ஸ்வஸம் வேத்யம் லக்ஷ்யார்த்தஸ்தத்
பதஸ்ய ஸ:॥

வேதாந்தவாக்யங்களால் அறியத்தக்கதும், உலகம் கடந்ததுமான 'அக்ஷர' பிரம்மத்தில் இரண்டறக் கலந்ததும், தூயதும், தன்னுணர்வானதும் தான் 'தத்', பதத்தின் லக்ஷ்யார்த்தம்.

(26)

सामानाधिकरण्यं हि पदयोस्तत्त्वमोर्द्वयोः ।
सम्बन्धस्तेन वेदान्तैर्ब्रह्मैक्यं प्रतिपाद्यते ॥

ஸாமாநாதிகரண்யம் ஹிபதயோஸ்தத்வமோர்த்வயோ:।
ஸம்பந்தஸ்தேந வேதாந்தை: ப்ரஹ்மைக்யம்
ப்ரதிபாத்யதே॥

மேலே கூறிய 'தத்' த்வம்' இவ்விரண்டு சொற்களின் ஓரிடச் சேர்க்கை அல்லது சம்பந்தம் காரணமாகத்தான் ஒன்றிய ப்ரஹ்மதத்வம் வேதாந்தங்களில் கூறப்படுகிறது.

(27-28)

भिन्नप्रवृत्तिहेतुत्वे पदयोरेकवस्तुनि ।
वृत्तित्वं यत्तथैवैकविभक्त्यन्तकयोस्तयोः ॥

सामानाधिकरण्यं तत्सम्प्रदायिभिरीरितम् ।
तथा पदार्थयोरेव विशेषणविशेष्यता ॥

பின்னப்ரவ்ருத்தி ஹேதுத்வே பதயோரேக வஸ்துநி।
வ்ருத்தித்வம் யத் ததைவைகவிபக்த்யந்த
கயோஸ்தயோ:॥

ஸாமாநாதி கரண்யம் தத்ஸம்ப்ரதாயிபிரீரிதம்।
ததா பதார்த்தயோரேவ விசேஷண விசேஷ்யதா॥

ஸாமாநாதிகரண்யம் என்றால் என்ன? வெவ்வேறு பொருளைக் குறிக்கும் இரண்டு சொற்கள் ஒரே பொருளைக் குறிப்பதாய், ஒரே விபக்தி கொண்டதாய் இருந்தால் அதுவே ஸாமாநாதிகரண்யம் என்பர் சான்றோர். இன்னும், அதேபோல இரண்டு சொற் கருத்துக்கள் ஒன்றுக்கொன்று விசேஷணம் - விசேஷ்யம் என்றபடி அமைவதும் ஸாமாநாதிகரண்யமே.

(29)

अयं सः सोऽयमितिवत्सम्बन्धो भवति द्वयोः ।
प्रत्यक्त्वं सद्वितीयत्वं परोक्षत्वं च पूर्णता ॥

அயம்ஸ: ஸோऽய மிதிவத்ஸம்பந்தோ பவதித்வயோ:।
ப்ரத்யக்த்வம் ஸத்விதீயத்வம் பரோக்ஷத்வம்ச பூர்ணதா॥

'இவன் அவன்தான்', அவனே இவன்' - இதுபோன்ற இடத்தில் இரண்டிற்கும் சம்பந்தம் ஏற்படுகிறது. அங்கு, உள் நோக்கிய தன்மை, இரண்டு உடையதன்மை, மறைந்த தன்மை, நிரம்பிய தன்மை - இவை.

(30)

परस्परविरुद्धं स्यात्ततो भवति लक्षणा।
लक्ष्यलक्षणसम्बन्धः पदार्थप्रत्यगात्मनोः॥

பரஸ்பரவிருத்தம்ஸ்யாத் ததோ பவதி லக்ஷணா।
லக்ஷ்யலக்ஷண ஸம்பந்த: பதார்த்த ப்ரத்யகாத்மனோ:॥

ஒன்றுக்கொன்று மாறாக இருப்பதால்' லக்ஷணை வரஹேதுவாகிறது. பதார்த்தம், அந்தராத்மா இவற்றினிடையே லக்ஷ்யலக்ஷண சம்பந்தம் உண்டாகிறது.

(31)

मानान्तरोपरोधाच मुख्यार्थस्यापरिग्रहे।
मुख्यार्थस्याविनाभूते प्रवृत्तिर्लक्षणोच्यते॥

மானாந்தரோப் ரோதாத்ச முக்யார்த்தஸ்யாபரிக்ரஹே।
முக்யார்த்தஸ்யாவிநாபூதே ப்ரவ்ருத்திர் லக்ஷணோச்
யதே॥

'அபிதா' - என்ற வேறு பிரமாணத்தின் விரோதம் காரணமாக முக்யார்த்தத்தை விட வேண்டிய நிலை ஏற்பட்டு, ஆனால் முற்றிலும் முக்யார்த்தத்தை விடாமலும் தோன்றுவது லக்ஷணையாகும்.

(32)

त्रिविधा लक्षणा ज्ञेया जहत्यजहती तथा।
अन्योभयात्मिका ज्ञेया तत्राद्या नैव सम्भवेत्॥

த்ரிவிதா லக்ஷணா ஜ்ஞேயா ஜஹத்யஜஹதீ ததா।
அன்யோபயாத்மிகா ஜ்ஞேயா தத்ராத்யா நைவ
ஸம்பவேத்।

லக்ஷணை மூன்று விதம் - ஜஹத்லக்ஷணா, அஜஹத் லக்ஷணா, ஜஹதஜஹத்லக்ஷணா என்றபடி, அவற்றில் முத லாவது-ஜஹத்லக்ஷணா 'தத்வமஸி' என்ற இடத்தில் வரவே வராது. ஏனெனில் -

(33)

वाक्यार्थमखिलं त्यक्त्वा वृत्तिः स्याद्या तदन्विते ।
गङ्गायां घोष इतिवज्जहती लक्षणा हि सा ॥

வாச்யார்த்த மகிலம் த்யக்த்வா வ்ருத்தி: ஸ்யாத்யா ததன்விதே।
கங்காயாம் கோஷ இதிவத் ஜஹதீ லக்ஷணா ஹிஸா॥

கங்காயாம் கோஷ: - கங்கைப்ரவாஹத்தில் யாதவர் குடி - என்ற இடத்தில் ஜஹத்லக்ஷணை வரும். எப்படி என்றால் வாச்யார்த்தத்தை முற்றிலும் விட்டு, ஆனால் வாச்யார்த்த தொடர்பு உள்ள இடத்தில் தானே அந்த லக்ஷணை வருகிறது!

(34)

वाच्यार्थस्यैकदेशस्य प्रकृते त्याग इष्यते ।
जहती सम्भवेन्नैव संप्रदायविरोधतः ॥

வாச்யார்த்தஸ்யைகதேசஸ்ய ப்ரக்ருதே த்யாக இஷ்யதே।
ஜஹதீ ஸம்பவேத் நைவ ஸம்ப்ரதாய விரோதத:॥

அதாவது - வாச்யார்த்தத்தின் ஒரு பகுதியை விட வேண்டிய நிர்பந்தம் ஏற்படுகிறது. ஆகவே, 'தத்வமஸி' - என்ற விடத்தில் ஸம்ப்ரதாயத்திற்கு முரணாக ஜஹத்லக்ஷணை வர வாய்ப்பில்லை.

(35)

वाच्यार्थमपरित्यज्य वृत्तिरन्यार्थके तु या।
कथितेयमजहती शोणोऽयं धावतीति वत् ॥

வாச்யார்த்த மபரித்யஜ்ய வ்ருத்திரன்யார்த்தகே துயா।
கதிதேய மஜஹதீ சோணோ஽யம் தாவதீதிவத்॥

அஜஹத்லக்ஷணை வருமிடம் - சோணோऽயம் தாவதி - சிவப்பு நிறமுள்ளது ஓடுகிறது - என்ற உதாஹரணம், இங்கு வாச்யார்த்தமான சிவப்பு என்பதை விடாமல், வேறு பொருளில் - மான் - என்ற பொருளில் போய் நிற்கிறது.

(36)

न सम्भवति साऽप्यत्र वाच्यार्थेऽतिविरोधतः ।
विरोधांशपरित्यागो दृश्यते प्रकृते यतः ॥

நஸம்பவதி ஸாऽப்யத்ர வாச்யார்த்தே ऽதி விரோதத:।
விரோதாம்ச பரித்யாகோ த்ருச்யதே ப்ரக்ருதேயத:॥

அந்த லக்ஷணையும் 'தத்வமஸி' என்ற இடத்தில் வருவதற்கில்லை. ஏனெனில் வாச்யார்த்தத்தில் மிகுந்த முரண் இருப்பதாலும், ப்ரக்ருதத்தில் விரோதத்திற்குரிய அம்சத்தை விட வேண்டியுள்ளதும்தான்.

(37)

वाच्यार्थस्यैकदेशं च परित्यज्यैकदेशकम् ।
या बोधयति सा ज्ञेया तृतीया भागलक्षणा ॥

வாச்யார்த்தஸ்யைகதேசம் ச பரித்யஜ்யைகதேசகம்।
யாபோதயதிஸா ஜ்ஞேயா த்ருதீயா பாகலக்ஷணா॥

வாச்யார்தத்தின் ஒரு பகுதியை விட்டு மற்றொரு பகுதியை விடாமல் போதிக்கும் அந்த லக்ஷணை மூன்றாவது என அறியவும். அது-

(38)

सोऽयं विप्र इदं वाक्यं बोधयत्यादितस्तथा ।
तत्कालत्वविशिष्टं च तथैतत्कालसंयुतम् ॥

ஸோऽயம் விப்ர இதம் வாக்யம் போதயத்யாதிதஸ்ததா
தத்காலத்வ விசிஷ்டம் ச ததைத் கால ஸம்யுதம்॥

ஸோऽயம்விப்ர: - அதே இந்த பிராம்மணன் - என்ற இந்த வாக்யம் ஆரம்பத்திலிருந்து அந்த காலத்தது என்ற கருத்தோடு, இந்த காலத்தது என்றதையும் சேர்த்து போதிக்கிறது.

(39)

अतस्तयोर्विरुद्धं तत्तत्कालत्वादिधर्मकम् ।
त्यक्त्वा वाक्यं यथा विप्रपिण्डं बोधयतीरितम् ॥

அதஸ்தயோர்விருத்தம் தத்தத் காலத்வாதிதர்மகம்।
த்யக்த்வா வாக்யம் யதா விப்ரபிண்டம் போதயதீரிதம்॥

ஆகவே அவ்விரண்டின் முரண்பாட்டை அதாவது அந்தந்த காலத்ததானதன்மையை விட்டு, பிராமணன் என்ற முழு பதார்த்தத்தை தெரிவிக்கிறது என்பதால் இந்த மூன்றாவது லக்ஷணை.

(40)

तथैव प्रकृते तत्त्वमसीत्यत्र श्रुतौ श्रुणु ।
प्रत्यक्त्वादीन्परित्यज्य जीवधर्मांस्त्वमः पदात् ॥

ததைவ ப்ரக்ருதே தத்வ மஸீத்யத்ர ச்ருதௌ ச்ருணு ।
ப்ரத்யக்த்வாதீன் பரித்யஜ்ய ஜீவ தர்மான் த்வம: பதாத்॥

அவ்வாறே ப்ரக்ருதத்தில் 'தத்வமஸி' என்ற இடத்தில் த்வம் பதத்தால் 'உள்ளே' (அந்த) என்பதான கருத்தை விலக்கி ஜீவ தர்மத்தை உணர்த்துவதோடு -

(41)

सर्वज्ञत्वपरोक्षादीन्परित्यज्य तदः पदात् ।
शुद्धं कूटस्थमद्वैतं बोधयत्यादरात्परम् ॥

ஸர்வஜ்ஞத்வ பரோக்ஷாதீன் பரித்யஜ்ய தத: பதாத்।
சுத்தம் கூடஸ்த மத்வைதம் போதயத்யாதராத்பரம்॥

தத்பதத்தால், 'எல்லாம் அறிந்தது - கண்ணுக்கு அப்பாற் பட்டது - என்ற அம்சத்தைவிட்டு, சுத்தமான, இரண்டாக இல்லாத ஆத்மாவை உணர்த்துகிறது.

(42)

तत्त्वमोः पदयोरैक्यमेव तत्त्वमसीत्यलम् ।
इत्थमैक्यावबोधेन सम्यग् ज्ञानं दृढं नयैः ॥

தத்வமோ: பதயோரைக்யமேவ தத்வ மஸீத்யலம்।
இத்தமைக்யாவபோதேந ஸம்யக் ஞானம் த்ருடம்நயை:॥

'தத்வமஸி' - என்ற இடத்தில் 'தத் - த்வம் - என்ற பதங்களின் ஒருங்கிணைப்பே கருத்தாகும். இவ்வித ஒருமையால் சீரிய செம்மையுணர்வு உறுதியாக்கப்படுகிறது.

(43-44)

अहं ब्रह्मेति विज्ञानं यस्य शोकं तरत्यसौ ।
आत्मा प्रकाशमानोऽपि महावाक्यैस्तथैकता ॥

तत्त्वमोर्बोध्यतेऽथापि पौर्वापर्यानुसारतः ।
तथापि शक्यते नैव श्रीगुरोः करुणां विना ॥

அஹம் ப்ரஹ்மேதி விஜ்ஞானம் யஸ்ய சோகம் தரத்யஸௌ
ஆத்மா ப்ரகா சமானோऽபி மஹாவாக்யைஸ்ததை கதா॥

தத்வமோர் போத்யதேऽதாபி பௌர்வாபர்யா நுஸாரத:।
ததாபி சக்யதே நைவ ஶ்ரீகுரோ: கருணாம் விநா॥

அஹம்ப்ரஹ்ம - நானேபிரம்மம் - என்ற விசேஷ உணர்வு எவனுக்கு வருகிறதோ, அவன் துன்பம் நீங்கப்பெறு கிறான். அங்கு ஆத்மா தெளிவாக்கப்படுவதாயினும், மஹாவாக் யங்களால் 'தத்' த்வம் - என்ற பதங்களுக்கு முன்பின்னதாக ஒருங்கிணைப்பும் தெளிவாக்கப்படுவதாயினும் குருவின் கருணை இல்லையாயின் -

(45)

अपरोक्षयितुं लोके मूढैः पण्डितमानिभिः।
अन्तःकरणसंशुद्धौ स्वयं ज्ञानं प्रकाशते ॥

அபரோக்ஷயிதும் லோகே மூடை: பண்டித மாநிபி:।
அந்த: கரணஸம்சுத்தௌ ஸ்வயம் ஜ்ஞானம்
ப்ரகாசதே॥

உலகில் சாதாரண மக்கள் காண்பது அரிது. ஆனால் அந்த: கரணம் தூய்மை பெற்றால் ஜ்ஞானம் தானே ஒளிரும்.

(46)

वेदावाक्यैरतः किं स्याद्गुरुणेति न साम्प्रतम्।
आचार्यवान्पुरुषो हि वेदेत्येवं श्रुतिर्जगौ ॥

வேத வாக்யைரத: கிம் ஸ்யாத் குருணேதி நஸாம்ப்ரதம்।
ஆசார்யவான் புருஷோஹி வேதேத்யேவம்
சருதிர்ஜகௌ॥

இவ்வாறு வேத வாக்யங்களாலேயே ஆத்மஞானம் உண்டாவதெனில் குரு எதற்கு என்று கேட்பது தவறு. குருவை நாடியவன்தான் ஆத்மாவை அறிய முடியும் என்று வேதம் கூறுகிறதே!

(47)

अनादाविह संसारे बोधको गुरुरेव हि।
अतो ब्रह्मात्मवस्त्वैक्यं ज्ञात्वा दृश्यमसत्तया ॥

அநாதாவிஹ ஸம்ஸாரே போதகோ குருரேவஹி।।
அதோப்ரஹ்மாத்மவஸ்த்வைக்யம் ஜ்ஞாத்வாத்ருச்ய
மஸத்தயா।।

தொடக்க மென்பதே இல்லாத இந்த உலக வாழ்க்கையில் குரு ஒருவரே போதிக்க வல்லவர். ஆகையால், பிரம்மம் - ஆத்மா இவ்விரண்டின் இணைப்பை அறிந்தால் மற்றது இல்லையானது.

(48)

अद्वैते ब्रह्मणि स्थेयं प्रत्यग्ब्रह्मात्मना सदा ।
तत्प्रत्यक्षात्परिज्ञातमद्वैतब्रह्म चिद्घनम् ॥

அத்வைதே ப்ரஹ்மணி ஸ்தேயம் ப்ரத்யக்ப்ரஹ்மாத்
மநா ஸதா।
தத்ப்ரத்யக்ஷாத்பரிஜ்ஞாதம் அத்வைதப்ரஹ்ம சித்கநம்।।

எப்பொழுதும் உள்ளுணர்வாகிய ப்ரஹ்ம நிலையோடு இரண்டற்றப்ரஹ்மத்தில் உறைய வேண்டும். அப்பொழுது நேரில் ப்ரஹ்மத்தைக் காணும் வாய்ப்பு உண்டு. அது தான் அத்வைத ப்ரஹ்மஜ்ஞான அனுபவமென்பது.

(49)

प्रतिपाद्यं तदेवात्र वेदान्तैर्न द्वयं जडम् ।
सुखरूपं चिदद्वैतं दुःखरूपमसज्जडम् ॥

ப்ரதிபாத்யம் ததேவாத்ர வேதாந்தைர்நத்வயம் ஜடம்।
ஸுகரூபம் சிதத்வைதம் து:கரூப மஸத்ஜடம்।।

வேதாந்தம் என்ற உபநிஷத்துக்களால் அந்த அத்வைத ப்ரஹ்மம்தான் விவரித்துக்கூறப்படுவது. அன்றி, ஜடமான உலக இரட்டையல்ல, ஏனெனில், இரண்டொழித்த ஆத்ம ஞானமே ஆனந்தமயமானது. முற்றிலும் பொய்யான ஜடமான உலக வாழ்க்கை துன்பமயமானது.

(50)

वेदान्तैस्तद्द्वयं सम्यङ्निर्णीतं वस्तुतो न यत् ।
अद्वैतमेव सत्यं त्वं विद्धि द्वैतमसत्सदा ॥

வேதாந்தை ஸ்தத் த்வயம் ஸம்யக் நிர்ணீதம்
வஸ்துதோ ந யத்।
அத்வைதமேவ ஸத்யம் த்வம் வித்தி த்வைதமஸத்ஸதா॥

உண்மையிலேயே ந்யாயமாக 'அந்த இரண்டு எது?' என்பதை வேதாந்தங்கள் என்ற உபநிஷத்துக்கள் வரையறுத்துள்ளன. அத்வைதமே உண்மை யென நீ அறிவாய். இரண்டு பற்றிய த்வைதம்' என்பதில்லையென்க.

(51)

शुद्धे कथमशुद्धः स्याद्दृश्यं मायामयं ततः ।
शुक्तौ रूप्यं मृषा यद्वत्तथा विश्वं परात्मनि ॥

சுத்தே கதமசுத்த:ஸ்யாத் த்ருச்யம் மாயாமயம்தத:।
சுக்தௌரூப்யம் ம்ருஷா யத்வத் ததாவிச்வம் பராத்மநி॥

தூயதில் தூய்மை தவிர தூய்மையின்மை இருக்காதே! ஆகையால் காணும் காட்சி பொய்யானது. முத்துச்சிப்பி எப்படி வெள்ளியாகும். அது பொய்தானே. அதுபோல் பரமாத்மக் காட்சியில் உலகக்காட்சி பொய்யே.

(52)

विद्यते न स्वतः सत्वं नान्यतः सत्वमस्ति वा ।
बाध्यत्वान्नैव सद्द्वैतं नासत्प्रत्यक्षभानतः ॥

வித்யதே நஸ்வத: ஸத்வம் நான்யத: ஸத்வமஸ்திவா।
பாத்யத்வாத்நைவ ஸத்வைதம் நாஸத்ப்ரத்யக்ஷபாநத:॥

உலகம் இருப்பதென்பது இயல்பானதல்ல. வேறு முறையில் உள்ளதெனச் சொல்வதெப்படி? இந்த இரட்டை நிலை, சர்சைக்குள்ளாவதால் உள்ளதன்று, கண்ணுக்குப் புலப்படுவதால் இல்லையானதுமில்லை.

(53)

सदसन्न विरुद्धत्वादतो निर्वाच्यमेव तत् ।
यः पूर्वमेक एवासीत्सृष्ट्वा पश्चादिदं जगत् ॥

ஸதஸந்ந விருத்தத்வாத் அதோ நிர்வாச்ய மேவ தத்।
ய:பூர்வமேக ஏவாஸீத் ஸ்ருஷ்ட்வா பஸ்சாதிதம் ஜகத்॥

அப்படியானால் 'ஸதஸத்' எனச் சொல்லலாமே என்றால், ஒன்றுக்கொன்று முரணாக இருப்பதால் அதுவும் இயலாது. ஆகவே அது அநிர்வாச்யம் - குறிப்பிக்க முடியாதது - என்றே முடிவாக்க வேண்டும். ஒருவராக இருந்தவர் இந்த உலகைப்படைத்தபின் -

(54)

प्रविष्टो जीवरूपेण स एवात्मा भवान्परः ।
सच्चिदानन्द एव त्वं विस्मृत्यात्मतया परम् ॥

ப்ரவிஷ்டோ ஜீவரூபேண ஸஏவாத்மா பவான் பர:।
ஸச்சிதானந்த ஏவ த்வம் விஸ்ம்ருத்யாத்மதயாபரம்॥

உலகில் ஒவ்வொன்றிலும் ஜீவாத்மாவாக உட்புகுந்து இருக்கிறார். ஸத்-சித்-ஆனந்த மயமாகவும் உள்ளார்.

(55)

जीवभावमनुप्राप्तः स एवात्मासि बोधितः ।
अद्वयानन्दचिन्मात्रः शुद्धः साम्राज्यमागतः ॥

ஜீவபாவமனு ப்ராப்த: ஸஏவாஸி போதித:।
அத்வயானந்த சின்மாத்ர: சுத்த: ஸாம்ராஜ்யமாகத:॥

ஜீவாத்ம நிலையையடைந்த அதே பேராளுமை கொண்ட அத்வயானந்த - பேரறிவு வடிவமாய்த் திகழ்கிறது ஆத்மா.

(56)

कर्तृत्वादीनि यान्यासंस्त्वयि ब्रह्माद्वये परे ।
तानीदानीं विचार्यन्ते किं स्वरूपाणि वस्तुतः ॥

கர்த்ருத்வாதீநி யாந்யாஸன் த்வயி ப்ரஹ்மாத்வயே பரே।
தாநீதாநீம் விசார்யந்தே கிம்ஸ்வரூபாணி வஸ்துத:॥

பரப்ரஹ்மஸ்ரூபமான ஆத்மாவில் கர்த்ருத்வம் - (செய்பவன் முதலிய) - சில விரேஷங்கள் இருந்தனவே அவை எப்படிப்பட்டவை என ஆராயப்படுகிறது.

(57)

अत्रैव श्रुणु वृत्तान्तमपूर्वं श्रुतिभाषितम् ।
कश्चित्गान्धारदेशीयो महारत्नविभूषितः ॥

அத்ரைவ ச்ருணு வ்ருத்தாந்தமபூர்வம் ச்ருதிபாஷிதம்।
கஸ்சித் கந்தாரதேசீயோ மஹாரத்ன விபூஷித:॥

வேதத்தில் கூறப்பட்ட ஒரு செய்தியை இங்கு குறிப்பிடுவோம். கந்தார நாட்டினனான ஒருவன் பெரும் பணக்காரன் ஆடை ஆபரணங்கள் பூண்டவனாக இருந்தான்.

(58)

स्वगृहे स्वाङ्गणे सुप्तः प्रमत्तः सन्कदाचन ।
रात्रौ चोरैः समागत्य भूषणानां प्रलोभितैः ॥

ஸ்வக்ருஹேஸ்வாங்கணே ஸுப்த: ப்ரமத்த:
ஸன்கதாசன।
ராத்ரௌசோரை: ஸமாகத்ய பூஷணானாம்
ப்ரலோபிதை:॥

அவன் தனது வீட்டில், தனது அரையில் சுய உணர்வின்றி தூங்கிக்கொண்டிருந்தான். அப்பொழுது தங்க நகைகளின் ஆசையால் திருடர்கள் உள்ளே புகுந்து -

(59)

बद्ध्वा देशान्तरं चोरैर्नीतः सन्गहने वने ।
भूषणान्यपहृत्यापि बद्धाक्षकरपादकः ॥

பத்வாதேசாந்தரம் சோரை: நீத: ஸன் கஹநே வநே।
பூஷணாந்யப ஹ்ருத்யாபி பத்தாக்ஷ கரபாதக:॥

நகைகளை திருடியது மட்டுமல்லாமல் கண், கை, கால்களில் கட்டுப்போட்டு, வேறு ஊருக்கு கொண்டு சென்று பெருங்காட்டில் -

(60)

निक्षिप्तो विपिनेऽतीव कुशकण्टक वृश्चिकैः ।
व्यालव्याघ्रादिभिश्चैव संकुले तरुसंकटे ॥

நிக்ஷிப்தோ விபிநேऽதீவ குசகண்டக வ்ருஸ்சிகை:।
வ்யால வ்யாக்ராதி பிஸ்சைவ ஸங்குலே தருஸங்கடே॥

கோரை புற்களும், முள் மரங்களும், கொடிய மிருகங்களும் நிரம்பிய காட்டில் தள்ளப்பட்டான்.

(61)

व्यालादिदुष्टसत्त्वेभ्यो महारण्ये भयातुरः ।
शिलाकण्टकदर्भाद्यैर्देहस्य प्रतिकूलकैः ॥

வ்யாலாதி துஷ்ட ஸத்வேப்யோ மஹாரண்யே பயாதுர:।
சிலா கண்டக தர்பாத்யை: தேஹஸ்யப்ரதி கூலகை:॥

அந்தக் காட்டிலுள்ள மலைப்பாம்பு முதலிய கொடிய பிராணிகளாலும், கற்கள், கண்டகங்கள், முதலிய உடலை வருத்தும் இனங்களாலும் -

(62)

क्रियमाणे विलुठने विशीर्णाङ्गोऽसमर्थकः ।
क्षुत्तृड्वातपवाय्वग्न्यादिभिस्तप्तोऽतितापकैः ॥

க்ரியமாணே விலுடனே விசீர்ணாங்கோ ऽஸமர்த்தக:।
க்ஷுத்த்ருடாதப வாய்வக்ந்யாதி பிஸ்தப்தோऽதி தாபகை:।

மோதல் நடந்தபொழுது உருக்குலைந்த அவயவங்களுடன் ஒன்றும் செய்ய இயலாதவனாய், பசி, தாகம், வெயில், கொடுங்காற்று, காட்டுத்தீ முதலியவற்றாலும் வெதும்பி கருகிப்போனான்.

(63)

बन्धमुक्तौ तथादेशप्राप्तावेव सुदुःखधीः ।
ददृशे कश्चिदाक्रोशन्नेकं तत्रैव तस्थिवान् ॥

பந்தமுக்தௌ ததா தேசப்ராப் தாவேவ ஸுது:கதீ:।
தத்ருசே கஸ்சிதாக்ரோசன் ஏகம் தத்ரைவ தஸ்திவான்।।

கட்டவிழ்த்து விடுவிக்க வேண்டியும், தன் ஊர் போய்ச் சேர வேண்டியும் அவன் மிகவும் துன்பப்பட்டான்.எ அங்கிருந்த போது கதறி அழுதபொழுது ஒருவரைக் கண்டான்!

(64)

तथारागादिभिर्वर्गैः शत्रुभिर्दुःखदायिभिः ।
चोरैर्देहाभिमानाद्यैः स्वानन्दधनहारिभिः ॥

ததா ராகாதி பிர்வர்கை: சத்ருபிர்து: கதாயிபி:।
சோரைர் தேஹாபிமாநாத்யை: ஸ்வாநந்த தனஹாரிபி:।।

அவ்வாறேதான் ஆத்மா ராகம் முதலிய துன்பம் விளைவிக்கும் எதிரிகளாலும், தேஹாபிமானம் முதலிய திருடர்கள் ஆத்மானந்தமாகிய செல்வத்தைக் கொள்ளையடிக்க (பிரமானந்தத்தை இழக்க நேரிட்டும், ஆத்ம ஜ்ஞானமின்மை என்ற துக்கத்திலாழ்ந்தும்).

**(65)**

ब्रह्मानन्दे प्रमत्तः स्वाज्ञाननिद्रावशीकृतः ।
बद्धस्त्वं बन्धनैर्भोगतृष्णाज्वरादिभिर्दृढम् ॥

ப்ரஹ்மானந்தேப்ரமத்த: ஸ்வாஜ்ஞான நித்ராவசீக்ருத:।
பத்தஸ்த்வம் பந்தனைர்போகத்ருஷ்ணா ஜ்வராதி
பிர்த்ருடம்॥

சுகபோகம், பேராசை, ஜ்வரம் முதலிய சங்கிலிகளால் கட்டுண்டது ஆத்மா (த்வம் பதத்தின் பொருள் அது).

**(66)**

अद्वयानन्दरूपात्त्वां प्रच्याव्यातीव धूर्तकैः ।
दूरनीतोऽसि देहेषु संसारारण्यभूमिषु ॥

அத்வயானந்த ரூபாத்த்வாம் ப்ரச்யாவ்யாதீவ தூர்தகை:।
தூரநீதோऽஸி தேஹேஷு ஸம்ஸாராரண்ய பூமிஷு॥

ஏமாற்றுபவர்களால், அத்வைதானந்தத்திலிருந்து வெகு தூரம் பல தேஹங்களில் இழுக்கப்பட்டு ஸம்ஸாரம் என்ற காட்டு பிரதேசங்களில் கொண்டு செல்லப் பட்டது ஜீவாத்மா.

**(67-68)**

सर्वदुःखनिदानेषु शरीरादित्रयेषु च ।
नानायोनिषु कर्मान्धवासनानिर्मितासु च ॥

प्रवेशितोऽसि सृष्टोऽसि बद्धस्वानन्ददृष्टितः ।
अनादिकालमारभ्य दुःखंचानुभवन्सदा ॥

ஸர்வது: கநிதாநேஷு சரீராதித்ரயேஷுச।
நாநா யோநிஷு கர்மாந்த வாஸநாநிர்மிதாஸுச॥

ப்ரவேசிதோऽஸி ஸ்ருஷ்டோऽஸி பத்தஸ் வானந்த
த்ருஷ்டித:।
அநாதிகாலமாரப்ய து: கம் சாநுபவன் ஸதா॥

நெடுங்காலமாக இந்த த்வம் பதவாச்யமான ஆத்மா, துன்பம் அனுபவித்துக் கொண்டு ஸ்தூல - சூக்ஷ்ம - காரணசரீரங் களிலும், கர்மாக்களில் குருட்டு வாஸனையால் தோற்றுவிக்கப் பட்ட பல யோனிகளில் தள்ளப்பட்டும் தடைபட்ட ஆத்மா னந்தம் காரணமாக பின்னும் பிறப்பிக்கப்பட்டது.

(69)

जन्ममृत्युजरादोषनरकादिपरम्पराम् ।
निरन्तरं विषण्णोऽनुभवन्नत्यन्तशोकवान् ॥

ஜன்மம்ருத்யு ஜராதோஷ நரகாதி பரம்பராம்।
நிரந்தரம் விஷண்ணோऽனுபவன் அத்யந்தசோகவான்॥

முதுமை, பிறப்பு, இறப்பு, நரகம் முதலிய தொடரை அனுபவித்து மிகவும் கிலேசத்துக்கு உள்ளானது இந்த ஜீவாத்மா.

(70)

अविद्याभूतबन्धस्य निवृत्तौ दुःखदस्य च ।
स्वरूपानन्दसंप्राप्तौ सत्योपायं न लब्धवान् ॥

அவித்யாபூதபந்தஸ்ய நிவ்ருத்தௌ து:கதஸ்ய ச।
ஸ்வரூபானந்த ஸம்ப்ராப்தௌ ஸத்யோபாயம்
நலப்தவான்॥

துன்பம் விளைவிக்கும் அஜ்ஞான மூலமான பந்தத்தை போக்கிக் கொள்வதற்கும், ஆத்மானந்தம் பெறுவதற்கும் உண்மை வழியை தெரிந்து கொள்ளவில்லை இந்த ஜீவாத்மா.

(71)

यथा गान्धारदेशीयश्चिरं दैवाद्दयालुभिः ।
कैश्चित्पान्थैः परिप्राप्तैर्मुक्तदृष्ट्यातिबन्धनः ॥

யதா காந்தார தேசிய: சிரம் தைவாத் தயாலுபி:।
கைஸ்சித் பாந்தை: பரிப்ராப்தைர்முக்தத்ருஷ்ட்யாதி
பந்தன:॥

வெகு காலத்திற்குப்பின் தயை கொண்ட சில வழிப் போக்கர்கள் சந்தித்து காந்தாரசேதத்துவன் கண், கை, கால் இவற்றில் கட்டவிழ்க்கப்பட்டவனாய்.

(72)

स स्वस्थैरुपदिष्टश्च पण्डितोनिश्चितात्मकः ।
ग्रामात् ग्रामान्तरं गच्छन्मेधावी मार्गतत्परः ॥

ஸ ஸ்வஸ்தைருபதிஷ்டஸ்ச பண்டிதோ நிஸ்சிதாத்மக:।
க்ராமாத் க்ராமாந்தரம் கச்சன் மேதாவீ மார்கதத்பர:॥

தன் நிலைபிறழாத அவரால் போதிக்கப்பட்டு தெளிந்த அறிவு நிரம்பியவனாய், தன் நம்பிக்கை கொண்டு நல்வழியே சென்று, ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் போய் கடைசியாக

(73)

गत्वा गान्धारदेशं स स्वगृहं प्राप्य पूर्ववत् ।
बान्धवैः सम्परिष्वक्तः सुखी भूत्वा स्थितोऽभवत् ॥

கத்வா காந்தாரதேசம் ஸ ஸ்வக்ருஹம்ப்ராப்ய பூர்வ வத்
பாந்தவை: ஸம்பரிஷ்வக்த: ஸுகீ பூத்வா
ஸ்திரோऽபவத்

காந்தாரம் சென்று முன் போல் தனது வீட்டையும் போய்ச் சேர்ந்தான். உறவினர் மகிழ்ச்சியுடன் கலந்துறையாட சுகமாக நிலைபெற்று வாழ்ந்தான்.

(74)

त्वमप्येवमनेकेषु दुःखदायिषु जन्मसु ।
भ्रान्तो दैवाच्छुभे मार्गे जातश्रद्धःसुकर्मकृत् ॥

த்வமப்யேவமநேகஷு துःகதாயிஷு ஜன்மஸு।
ப்ராந்தோ தைவாத் சுபே மார்கே ஜாத ச்ரேத்தः ஸுகர்ம க்ருத்॥

ஜீவாத்மாவாகிய ஒருவரும் துன்பம் கொடுக்கும் பல பிறவிகள் உழன்று, பின் அதிர்ஷ்ட வசமாக நல்ல மார்கத்தில் சிரத்தை உண்டாகி, நல்லனவற்றையே செய்து-

(75)

वर्णाश्रमाचारपरोऽवाप्तपुण्यमहोदयः ।
ईश्वरानुग्रहाल्लब्धब्रह्मविद्गुरुसत्तमः ॥

வர்ணாச்ரமாசாரபரோ ऽவாப்த புண்ய மஹோதயः।
ஈச்வரானுக்ரஹாத் லப்தப்ரஹ்ம வித் குருஸத்தமः॥

வர்ணாச்ரமங்களுக்குரிய ஆசாரங்களைச் செய்து புண்யம் பெற்று, கடவுள் அனுக்ரஹத்தால் ப்ரஹ்மஜ்ஞானியான குருவையும் கண்டெய்தினாயே!

(76)

विधिवत्कृतसंन्यासो विवेकादियुतः सुधीः ।
प्राप्तब्रह्मोपदेशोऽद्य वैराग्याभ्यासतः परम् ॥

விதிவத்க்ருத ஸன்யாஸோ விவேகாதியுத: ஸுதீ:।
ப்ராப்தப்ரஹ்மோபதேசோऽத்ய வைராக்யாப்யாஸத: பரம்॥

மேலும் நீ முறையாக ஸன்யாசம் செய்து கொண்டு விவேகம் நிரம்பிய அறிவாளியாகி, ப்ரஹ்மோபதேசம் பெற்று, வைராக்யத்தை மேற்கொண்டவனாகி விட்டாயே!

(77)

पण्डितस्तत्र मेधावी युक्त्या वस्तु विचारयन् ।
निदिध्यासनसम्पन्नः प्राप्तो हि त्वं परं पदम् ॥

பண்டிதஸ்தத்ர மேதாவீ யுக்த்யா வஸ்து விசாரயன்।
நிதித்யாஸன ஸம்பந்ந: ப்ராப் தோஹி த்வம் பரம்பதம்॥

நீ கல்வி கேள்விகளால் மேதாவியாய்த் திகழ்ந்து யுக்தியுடன் ஆத்ம விசாரம் செய்பவனாய், நிதித்யாஸனம் முதலியனவும் அமையப்பெற்று பரமபதத்தையடையத் தகுதியுடையவனாயுள்ளாய்!

(78)

अतो ब्रह्मात्मविज्ञानमुपदिष्टं यथाविधि ।
मयाऽऽचार्येण ते धीर सम्यग् तत्र प्रयत्नवान् ॥

அதோ ப்ரஹ்மாத்ம விஜ்ஞானமுப திஷ்டம் யதாவிதி।
மயாऽऽ சார்யேண தே தீர ஸம்யக் தத்ர ப்ரயத்னவான்॥

ஆசார்யனாகிய நான் முறையாக ப்ரஹ்ம - ஆத்ம விளக்கத்தை உபதேசித்துள்ளேன். அதில் நீ நன்கு பயிற்சி செய்ய வேண்டும்.

(79)

भूत्वा विमुक्तबन्धस्त्वं छिन्नद्वैतात्मसंशयः ।
निर्द्वन्द्वो निःस्पृहो भूत्वा विचरस्व यथासुखम् ॥

பூத்வா விமுக்த பந்தஸ்த்வம் சின்னத்வைதாத்
மஸம்சய:।
நிர்த்வந்த்வோ நி:ஸ்ப்ருஹோபூத்வா விசரஸ்வ
யதாஸுகம்॥

நீஸம்ஸாரபந்தம் நீங்கி, இரண்டு ஆத்மாக்கள் உண்டா இல்லையா என்ற சந்தேகம் தீர்ந்து, இரட்டை எண்ணமும், பற்றும் அகன்று சுகமாக இருக்கலாம்.

(80)

वस्तुतो निष्प्रपञ्चोऽसि नित्यमुक्तः स्वभावतः ।
न ते बन्धविमोक्षौ स्तः कल्पितौ तौ यतस्त्वयि ॥

வஸ்துதோ நிஷ்ப்ரபஞ்சோऽஸி நித்யமுக்த: ஸ்வபாவத:।
நதே பந்தவிமோக்ஷௌ ஸ்த: கல்பிதௌ தௌ
யதஸ்த்வயி॥

'நீ' உண்மையில் உலகத்தொடர்பு இல்லாதவனாயும், எப்பொழுதும் முக்தனாயும் தான் இருக்கிறாய். பந்தமோ மோக்ஷமோ கூட இல்லை; அவை உன் விஷயத்தல் முற்றிலும் கல்பிதம்தான்.

(81)

न निरोधो न चोत्पत्तिर्न बन्धो न च साधकः ।
न मुमुक्षुर्न वै मुक्त इत्येषा परमार्थता ॥

ந நிரோதோந் நசோத்பத்திர்நப தோ ந ச ஸாதக:।
நமுமுக்ஷுர்ந வைமுக்த இத்யேஷா பரமார்த்ததா॥

'உனக்கு' த்தடையோ, புதிய தோற்றமோ இல்லை. நீ கட்டுண்டவனில்லை, சாதகனுமில்லை. மோக்ஷம் விரும்பிய வனாகவோ அல்லது மோக்ஷம் பெற்றவனாகவோ இல்லை இது உண்மை.

(82)

श्रुतिसिद्धान्तसारोऽयं तथैव त्वं स्वयाधिया ।
संविचार्य निदिध्यास्य निजानन्दात्मकं परम् ॥

ச்ருதிஸித்தாந்தஸாரோऽயம் ததைவ த்வம் ஸ்வயா தியா
ஸம்விசார்ய நிதித்யாஸ்ய நிஜானந்தாத்மகம் பரம்॥

இது வேதத்தில் முடிவான முடிவின் சுருக்கம். அவ் வாறே 'நீ' தனது ஞானத்தால் ஆராய்ந்து ஆத்மானந்தத்தை நன்கு உன்னிப்பாய் அறிந்து -

(83)

साक्षात्कृत्वाऽपरिच्छिन्नाद्वैतब्रह्माक्षरं स्वयम् ।
जीवन्नेव विनिर्मुक्तो विश्रान्तः शान्तिमाश्रय ॥

ஸாக்ஷாத்க்ருத்வாऽபரிச்சின்னாத்வைதப் ரஹ்மாக்ஷரம் ஸ்வயம்
ஜீவந்நேவ விநிர்முக்தோ விச்ராந்த: சாந்தி மாச்ரய॥

ஸ்வயமாகவே அளவு கடந்த பெருமை வாய்ந்த அத்வைத ப்ரஹ்மத்தை நேரே கண்டனுபவித்து, ஜீவித்திருக்கும் பொழுதே முக்தி பெற்று ஒய்வாக சாந்தியையும் பெறுவாய்.

(84)

विचारणीया वेदान्ता वन्दनीयो गुरुःसदा।
गुरूणां वचनं पथ्यं दर्शनं सेवनं नृणाम् ॥

விசாரணீயா வேதாந்தா வந்தநீயோ குரு: ஸதா।
குருணாம் வசனம்பத்யம் தர்சனம் ஸேவநம் ந்ருணாம்॥

வேதாந்தங்கள் ஆராயப்பட வேண்டியவையே. குருவும் எப்பொழுதும் வந்தனம் செய்யத்தக்கவர். பொதுவாக மனிதர்களுக்கு குருநாதருடைய வார்த்தை நன்மை பயக்கக் கூடியது, அவரை நேரில் காண்பதும், சேவிப்பதும் நல்லதே.

(85)

गुरुर्ब्रह्म स्वयं साक्षात्सेव्यो वन्द्यो मुमुक्षुभिः।
नोद्वेजनीय एवायं कृतज्ञेन विवेकिना ॥

குருர்ப்ரஹ்ம ஸ்வயம் ஸாக்ஷாத்ஸேவ்யோ வந்த்யோ முமுக்ஷுபி:।
நோத்வேஜநீய ஏவாயம் க்ருதஜ்ஞேநவிவேகிநா।

மோக்ஷம் விரும்புபவர் எவரும் குருவை - ப்ரஹ்ம ரூபியான குருவை ஸேவிக்க வேண்டும் நன்றியுடன், விவேகியானவன் குருவை வெறுக்காமல் இருக்கக் கடவன்.

(86)

यावदायुस्त्वया वन्द्यो वेदान्तो गुरुरीश्वरः।
मनसा कर्मणा वाचा श्रुतिरेवैष निश्चयः॥

யாவதாயுஸ்த்வயா வந்த்யோ வேதாந்தோ குரு ரீச்வர:।
மனஸா கர்மணா வாசா ச்ருதிரேவைஷ நிஸ்சய:॥

ஆயுள் உள்ளவரை வேதாந்த குருவை வணங்க வேண்டும் மனதாலும் வாக்காலும் செயலாலும் அவ்வாறு வணங்குதல் நிச்சயம் செய்ய வேண்டும்.

(87)

भावाद्वैतं सदाकुर्याक्रियाद्वैतं न कर्हिचित्।
अद्वैतं त्रिषु लोकेषु नाद्वैतं गुरुणा सह ॥

பாவாத்வைதம் ஸதா குர்யாத் க்ரியாத்வைதம் நகர்ஹிசித்।
அத்வைதம் த்ரிஷு லோகேஷு நாத்வைதம் குருணாஸஹ॥

கருத்தளவில் குருவோடு இரண்டற்றதன்மை கொள்ளலாம். செயல் அளவில் ஒரு பொழுதும் அத்தன்மை கூடாது. மூவுலகிலும் உள்ள அத்வைதம் குருவுடன் இருக்கக் கூடாது.

தத்வோபதேசம் முற்றிற்று

